# மாயா பஞ்சகம்

தமிழ் உரை:-
**K.P. மஹாதேவ சாஸ்திரிகள்.**

**निरुपम नित्य निरंशकेप्यखंडे मयिचिति सर्व विकल्पनादिशून्ये ।**
**घटयति जगदीश जीवभेदम् त्वघटित घटनापटीयसी माया ॥ १**

**நிருபம நித்ய நிரம்ஶகேப்யக²ண்டே³ மயிசிதி ஸர்வ விகல்பநாதி³ஶூன்யே ।**
**க⁴டயதி ஜக³தீ³ஶ ஜீவபே⁴த³ம் த்வக⁴டித க⁴டனாபடீயஸீ மாயா ॥ 1**

நிகரற்ற, திரிகாலாபாத்யமான நிரவயவமான அகண்டமான எல்லா கல்பனை யற்றதான அஹங்காரோபலக்ஷிதமான ஆத்ம சைதன்யத்தில் பொருந்தாதவற்றைப் பொருந்தி வைக்கும் சக்திவாய்ந்த மாயை, ஜகத்தென்றும். ஈசனென்றும், ஜீவனென்றும் பேதத்தைப் பொருத்தி வைக்கின்றது.

**च्रुतिशत निगमान्त शोधकान प्यहह धनादि निदर्शनेन सद्यः ।**
**कलुषयति चतुष्पदाद्य भिन्नान् अघटितघटनापटीयसी माया ॥ २**

**ச்ருதிஶத நிக³மாந்த ஶோத⁴கான ப்யஹஹ த⁴நாதி³ நித³ர்ஶனேன ஸத்³ய: ।**
**கலுஷயதி சதுஷ்பதா³த்³ய பி⁴ன்னான் அக⁴டிதக⁴டனாபடீயஸீ மாயா ॥ 2**

நூற்றுக் கணக்கான வேதவேதாந்தங்களைப் பரிசீலித்த வித்வான்களையும், தன தான்யாதி வஸ்துக்களைப் பெற்றுள்ள பார்வையைக் கொடுப்பதால் உடனே பசு பக்ஷியாதிகளுக்குச் சமமாகக் கலங்கச் செய்வது மாயை.

**सुखचिदखण्डमद्विितीयं वियदनलादिविनिर्मिते नियोज्य ।**
**भ्रमयति भवसागरे नितान्तम् त्वघटित घटनापटीयसी माया ॥ ३**

**ஸுக²சித³க²ண்ட³மத்³விதீயம் வியத³னலாதி³விநிர்மிதே நியோஜ்ய ।**
**ப்⁴ரமயதி ப⁴வஸாக³ரே நிதாந்தம் த்வக⁴டித க⁴டனாபடீயஸீ மாயா ॥ 3**

ஒட்டாததை ஒட்டவைக்கத் திறமை வாய்ந்த மாயை ஸஜாதீய விஜாதீய ஸ்வகதபேதமற்றதாய் அகண்ட ஸச்சிதானந்த ஸ்வரூபமான பிரம்மத்தைத் தன்னால் கல்பிக்கப்பட்ட ஆகாசாதி பாஞ்ச பௌதிகமான சரீரத்தில் பிரதிபலிக்கும்படி செய்து (அதற்கு ஜீவபாவத்தைக் கல்பித்து) ஸம்ஸாரக்கடலில் மிகவும் அலையும் படிச் செய்கிறது.

**अपगतगुणवर्ण जातिभेदे सुखचितिविप्रविडाद्यहं कृतिं च ।**
**स्फुटयति सुतदारगेहमोहं अघटित घटनापटीयसी माया ॥ ४**

**அபக3தகு3ணவர்ண ஜாதிபே4தே3 ஸுக2சிதிவிப்ரவிடா3த்3யஹம் க்ருதிம் ச ।**
**ஸ்பு2டயதி ஸுததா3ரகே3ஹமோஹம் அக4டித க4டனுபடீயஸீ மாயா ॥ 4**

நீல பீதாதி தர்மங்களும் பிரம்மசர்யாதி வர்ணங்களும் மனுஷ்யத்வாதி ஜாதிகளும் அற்றதாய் நிர்பேதமான ஸச்சிதாநந்த பிரம்மத்தில் பிராம்மண க்ஷத்திரிய வைசிய சூத்ரத்வாதி தர்மங்களுள்ள சரீரங்களில் நான் பிராம்மணன் முதலிய அபிமானத்தை உண்டாக்கித் தனக்கு வெளிப்பட்ட புத்ரன் மனைவி வீடு இவைகளிலும் மோஹத்தை அபார சக்திவாய்ந்த மாயை வெளிப்படுத்துகிறது.

**विधिहरिहर विभेदमप्यखण्डे बत विरचय्य बुधानपि प्रकामम् ।**
**भ्रमयति हरिहरभेद भावान् अघटितघटनापटीयसी माया ॥ ५**

**விதி4ஹரிஹர விபே4த3மப்யக2ண்டே3 ப3த விரசய்ய பு3தா4னபி ப்ரகாமம் ।**
**ப்4ரமயதி ஹரிஹரபே4த3 பா4வான் அக4டிதக4டனுபடீயஸீ மாயா ॥ 5**

அஸாத்தியமானவற்றை சாதிக்கவல்ல மாயை, அகண்ட ஸச்சிதானந்த பிரம்மத்தில் விஷ்ணு சிவன் பிரம்மா என்ற பேதத்தைக் கல்பித்து வேத வேதாந்த நிபுணர்களுக்கும், அவாஸ்தவமான பேதத்தை வாஸ்தவமாகக் காட்டி ஹரி ஹராதிகளை உண்மையாக வேறுபட்டவர்கள் என்ற எண்ணங்களை உண்டாக்கி அவர்களை அலையச் செய்கின்றது, அந்தோ!